8th March 1961]

**SRI M. P. SARATHI** : ஸார், அவர் தற்கொலை செய்துகொண்ட காலத்தில், சட்டைப் பையில் ஒரு கடிதத்தில் ரூ. 100 சம்பளம் வாங்கினாலும், குடும்பத்தை நடத்திக்கொண்டுபோக முடியவில்லை என்ற காரணத்திற்காகத் தற்கொலை செய்துகொள்கிறேன் என்று எழுதி வைத்திருந்தாரா? அது உண்மையா? அதன்பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM:** யார், யார் என்ன எழுதி வைக்கிறார்கள் என்பதை விசாரிக்க வேண்டிய அவசியமில்லை. போலீசார் விசாரித்ததில் அவர்கள் இறந்ததற்குக் காரணம் கடன் பளுவில் அவர் மூழ்கியிருந்தார் என்று நிர்ணயித்தார்கள். தற்கொலைக்கு எத்தனையோ காரணங்கள் இருக்கின்றன. செழுமையான அன்னிய நாடுகளில்கூட, தற்கொலைகள் நடைபெறுகின்றன.

*Medical statistics*

* 660 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether Training and Research in Medical Statistics are carried on in this State; and

(*b*) whether any scholars have been sponsored by our State for this purpose?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

*Loans to ryots*

*** 661 *Q.*—SRI V. SUBBIAH** : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

ரயத்துகளுக்கு வழங்கிய பல்வேறுவகைக் கடன்களை, அறுவடை காலத்தில் மட்டுமே வசூலிக்கும் உத்தேசமுண்டா?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

**SRI V. SUBBIAH** : ஸார், இந்த நில வரியையும், அவர்களுடைய கடன்களையும் வசூலிக்கும் காலம் அவர்களிடம் விவசாயப் பொருள்கள் கிடைத்து வீட்டிற்கு வந்த பிறகு இருக்க வேண்டும். பல இடங்களில் நிலவரியையும், கடன் தொகையையும் போலீசை வைத்து வருமானம் இல்லாத காலத்தில், பயமுறுத்தி கண்டிப்பாக வசூலிக்கிறார்கள். அந்த நிலையை மாற்றி அவர்களுக்கு வருமானம் வரும் காலத்தில் வசூலிக்க ஏற்பாடு செய்யப்படுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : Generally, the intensive period of collection was during the harvest season only. But, during the other seasons also, there will be some collection, especially in the matter of arrears. However, generally, officers see that the collection is mostly made after the harvest is over.